पुमान् वा नारी वा अज्ञानि, धृतं वस्त्रं शिरः केशान् वा स्पृष्ट्वा पात्रं न स्पृशेत् । हस्तं प्रक्षाल्यैव स्पृशेत् । अप्रक्षाल्य स्पर्शे शुद्धिः कर्तव्या । 'धृतं वस्त्रं स्पृष्ट्वा नारीभिः पात्रस्पर्शेऽपि नाशुद्धिः, तदा हस्तप्रक्षालनं तासां वृथा चेष्टैव' इत्युक्तिस्तु तथाविधप्रमाणाभावात् संप्रतिपन्नशिष्टानुष्ठानाभावाच्च चिन्त्या ॥

## स्वाध्यायप्रकरणम्

भगवदभिषेकतोयोपयोगानन्तरं कृतशुद्धिके स्थले आसीनः इज्यां समाप्य "कृतं च" इत्यादिना स्वाध्यायसंकल्पं कुर्यात् । यथाशक्ति वेदान्तग्रन्थावलोकन-प्रवचन-सात्त्विकपुराणपठन-मन्त्रजपादीन् कुर्यात् । उपादानकाल इवास्मिन् कालेऽपि अर्थकामप्रावण्य-परनिन्दादि-गन्धरहितैः आत्मगुणपूर्णैः अनुष्ठानपर्यन्तज्ञानशालिभिः परमभागवतैः सह परभक्तिनम्रः संभाषेत । उक्ताकाररहितकेवलश्रीवैष्णवविषयेऽपि प्रीतिमान् भवेत् । कस्मिन्नपि कदाऽपि करणत्रयेणापि अपराधलेशमपि न कुर्यात् । कदाचित् कर्मवशात् जाते अपराधे, सद्यः क्षामणं कुर्यात् । तदकरणे श्रीवैष्णवापराधिनाऽनेन क्रियमाणं सर्वं सत्कर्म विफलमेव स्यात् । भगवत्परत्वज्ञान-देवतान्तरवर्जनरूपाकारद्वययोगित्वे केवल-श्रीवैष्णवविषयेऽप्यपराधः सत्कर्मनैष्फल्यापादक एव । अन्यविषये-ऽप्यपराधः सामवादादिना तत्तदधिकारानुगुण्येन सद्यः परिहरणीयः । केनचित् भागवतेन निबन्धनमुखेन वा साक्षाद्वा प्रतिपादितमर्थं प्रमाणशिष्टाचाराननुगुणं मन्वानस्य तं प्रति ग्रन्थतो वा साक्षाद्वा

दुरुक्तिलेशवर्जं प्रमाणाद्यनुगुणत्वेन स्वाभिमतस्यार्थस्य प्रतिपादनं नापराध-कोटौ प्रविशेत्। तदप्यपराधत्वेन यदि भागवतो मन्यते, तदाऽपि विनीतेन क्षामणमात्रं कार्यम्। अर्थप्रतिपादनं तु स्वेव कृतं न्याय्यं चेत् नान्यथा कुर्यात्। स्वस्य वस्तुतो निरपराधत्वेऽपि स्वकर्मवशात् पार्श्वस्था यदि परमभागवतं कंचित् प्रति आत्मानमपराधिनं मन्यन्ते, तदाऽपि निर्विण्ण-चेतसा परमभागवतं पार्श्वस्थांश्च प्रति सहृदयं क्षामणं कार्यम्। वस्तुस्थि-तिश्चोद्घाटनीया। यद्येवमपि तथैव मन्येरन्, तदाऽपि न तान् प्रति चित्तविकारं भजेत्। अपितु स्वकर्म स्मरन् तान् प्रति अविकृतमनाः सन्तुष्टचित्तो वर्तेत। स्वविषये निष्कारणमपकुर्वत्स्वपि स्वकर्म तत्कर्म च स्मरता एवमेव तेषु निर्विकारं ससन्तोषं च वर्तितव्यम्। केनाऽपि कारणेन कमप्यपराधलेशं न कुर्यात्, न वा कारयेदिति सर्वसारम्। तदिदमपराधवर्जनं तत्संभवे क्षामणं परेणापराधे निर्विकारचित्तत्वादिकं च संन्यासिनामपि गृहस्थविषयेऽपि तुल्यं वेदितव्यम्। क्षामणं तु कमिष्टयति-गृहस्थविषये शास्त्रबलात्, विना प्रणामं, भवेत्॥

## सायंसन्ध्योपासनक्रमः

सायंसन्ध्योपासनं नदीतटाकादावेव शक्तः कुर्यात्। अनन्तरं गृहमागत्य यथाशक्ति स्वार्चामभ्यर्च्य प्रातरिव सांगप्रपदनं कुर्यात्। तत्र "सायमभिगमन" इति स्थाने "श्वः प्रातरभिगमन" इति पठनीयम्। अनन्तरं तर्पणरूपं वा वैश्वदेवं कुर्यात्। सन्ध्योपास नानन्तरमेव (निवेदनात् पूर्वं) वैश्वदेवतर्पणं न कदाऽपि कुर्यात्। आदित्ये अस्तं गते अन्ततो घटिकाद्वयमपोह्यैव भुञ्जीत॥

## योगप्रकरणम्

अनन्तरं कृतशुद्धिके स्थले आसीनः स्वाध्यायं समाप्य, योग-संकल्पं कुर्यात् । शक्तश्चेत्, श्रीमदाह्निकोक्तरीत्या श्रीवैकुण्ठगद्यानु-सन्धानपूर्वकं योगमनुतिष्ठेत् । अशक्तस्तु भगवद्ध्यानसोपानमनु-सन्दधीत । तत्राप्यशक्तौ,

"पादाम्भोजं स्पृशति भजते रंगनाथस्य जंघाम्
ऊरुद्वन्द्वे विलगति शनैरूर्ध्वमभ्येति नाभिम् ।
वक्षस्यास्ते वलति भुजयोः मामिकेयं मनीषा
वक्त्राभिख्यां पिबति वहते वासनां मौलिबन्धे ॥"

इति श्लोकमनुसन्दधीत । तन्मात्रानुसन्धानपक्षे तत्तद्दिव्यदेशवासादि-निबन्धन-तत्तन्मूर्तिविषय-शास्त्राद्यविरुद्धाभिमानातिशयसंभवे 'रंगनाथस्य' इत्यस्य स्थाने 'श्रीनिवासस्य', 'हस्तिनाथस्य', ('देवराजस्य',) 'देव-नाथस्य', 'भूवराहस्य', 'शार्ङ्गहस्तस्य' इत्येवंरीत्या अनुसन्धानेऽपि न दोषः । तत्र चतुर्भुजमूर्तिविषये 'जंघा'शब्द इव एकत्वाविवक्षा-संभवात् 'भुजयोः' इत्यस्य स्थाने 'च भुजे' इति पठनमुचितम् । ततः शुभाश्रयं यथाशक्ति ध्यायेत् । निद्राप्रसक्तौ अनावृतसौधादिभिन्न-स्थले परिशुद्धे शयने उदग्भिन्नायां कस्यांचिद्दिशि निहितशिराः अनग्न-त्वादिनियमवान् माधवशब्देन श्रियःपतिं स्मरन् सुखेन शयीत ।

## सर्वप्रकरणशेषः

एतावता प्रबन्धेन तत्तत्प्रकरणेषु उपादेयान् हेयांश्च कतिचन

क्विषयान् दिक्प्रदर्शननीतिमनुसृत्य प्रा ीदशाम। एवंजातीयकान् अन्यान् अंशान् आस्तिकाग्रेसराः सप्रतिपन्नशिष्टानुष्ठानमन्वीक्ष्य गृह्णीयुरिति इतो विरम्यते। परन्तु अत्यन्तावश्यकः कश्चन विषयः सर्वप्रकरणशेषतयोच्यते।

केषुचित् कर्मसु प्राणायामत्रयं शास्त्रेषु विहितम्। एवं क्वचिदाचमनद्वयं, कुत्रचित् तत्त्रयं च विहितम्। गायत्रीजपोऽपि अष्टोत्तरसहस्रसंख्याकः, अष्टोत्तरशतसंख्याकः, तन्न्यूनसंख्याकश्च बहुविध उक्तः। अशुद्धपात्रस्य शुद्ध्यर्थं तिन्त्रिणीमृज्जलादिभिः त्रयोदशवारं शोधनं विहितम्। एवं गुद-लिङ्गप्रक्षालनमपि संख्यानियमवदेव दृष्टम्। एवमन्यत्रापि द्रष्टव्यम्। अत्र सर्वत्र सत्वरेण अन्यचिंतेन च अधिकसंख्यापरिग्रहापेक्षया, अत्वरेण तच्चितेन च शास्त्रोक्तायाः तदविरोधेन क्वचित् स्वयमूहितायाश्च न्यूनसंख्यायाः परिग्रह एव वरम्। तथा हि—अत्वरं सध्यान च प्राणायामाचमनयोः अशक्तेन सकृत्करणमपि प्रत्यवायनिवारकं भगवत्प्रीतिजनकं च भवेत्। न वैपरीत्येन असकृत्करणम्। ततश्चाचमने चुलकेन जलादानानन्तरं मन्त्रं शनैरुच्चार्य हृद्गतं तोयं पिबेत्। एवं त्रिःकुर्यात्। न तु तोयमाददान एव पिबेत्। अङ्गस्पर्शश्च त्वरां विना यथावन्मन्त्रेण कार्यः। प्राणायाममपि सम्यक् कुर्यात्। एवमशक्तौ सत्यां यथावदनुष्ठाने दशवारजपोऽपि युक्ततरः। न त्वशक्तावपि वैपरीत्येनानुष्ठितोऽधिकजपः। किंपुनः शक्तौ। एवमन्यत्राप्यूह्यम्। तथा ध्यानरहितं कर्म निष्फलम्। तस्मात् सन्ध्योपासनादिकं सर्वं कर्म तत्तद्देवताः, क्वचित् तदन्तर्यामिणं क्वचित् साक्षाद्ब्राच्यं

च परमात्मानं तदीयविग्रहादिकमन्यांश्च विषयान् ध्यायन्नेव कुर्यात् । एवं जल्पतोऽधिकजपापेक्षया, मौनिनः स्वल्पजप एव ज्यायान् ॥

एवं भगवदाराधनेऽपि सत्वरं ध्यानरहितं च अनेकोपचार-समर्पणापेक्षया अत्वरं सध्यानावधानं च प्रधानकतिपयोपचारसमर्पणमेव वरम् । तथा हि—उद्धरिण्या अर्घ्यमादाय, 'भगवन्! इदमर्घ्यं प्रति-गृह्णीष्व' इति सभयभक्तिविनयं शनैः प्रार्थ्य, मूलमन्त्रं सस्वरमुच्चार्य भगवद्दक्षिणहस्ते मनसा किञ्चित् प्रदाय, शेषं प्रतिग्रहपात्रे प्रक्षिप्य, 'भगवन्! एतदनुबन्धिनोऽपराधान् क्षमस्व' इति प्रार्थ्य, 'अनेन भग-वान् प्रीयतां वासुदेवः' इति भगवति समर्पयेत् । एवं पाद्यादावपि द्रष्टव्यम् । एवं करणे देशकालादिवैषम्येण लघुतरमर्चनेऽपि न दोषः । अतित्वरया करणे, सर्वमकृतप्रायमेव । यद्येकमपि शास्त्रं संपूर्णमधीते, सम्यक् जानाति च, तदा विद्वानिति व्यवह्रियते, शक्नोति च अनधी-तमपि विषयजातं विज्ञातुम् । न हि किंचित्स्पृष्टसर्वशास्त्रः कंचिदपि विषयलवं यथावत् ज्ञातुमीष्टे । अयमेव न्यायोऽत्रानुसन्धेयः । यथाव-दधीतसर्वशास्त्रस्य प्रवचनादाविव ; यथावदनुष्ठितमुख्यपक्षस्य भगव-त्प्रीत्यादौ कैमुतिकन्यायो द्रष्टव्यः ॥

एवं हस्तौ आकूर्परं सम्यक् प्रक्षाल्यैव पूर्वोक्तपात्रत्रयं अन्यद्वा परिशुद्धं वस्तु गृह्णीयात् ; न तु करतलमात्रं ब्रह्मयज्ञकाल इव जलेन संमृज्य गृह्णीयात् । तथा सति पात्रादेरशुद्ध्या, तत्साध्यं क्रियाजातं विफलमेव भवेत् । किं बहुनोक्तेन ? यस्तावत् श्रुतिस्मृतिपाञ्चरात्रोक्तं

सर्वं नित्यनैमित्तिकरूपसत्कर्मजातं तत्तत्कालेषु यथावदनुतिष्ठति, तस्यापि सूक्ष्माचारापरिज्ञाने स्वदेह-यज्ञसूत्र-उत्तरीयादेरशुद्धतायाः, पूर्वोक्तपात्राणामशुद्धेन पादशोधनपात्रादिना परस्परं च संसर्गस्य, साक्षादाराधनोपकरणभूततुलसीपुष्पगन्धादीनां भगवदनर्हतायाश्च प्रसङ्गेन, निष्फलानुष्ठानत्वं यथावदनुष्ठानाभावो वा प्रसजेत् । तत्त्वज्ञानादिभिः अन्यैर्बहुभिः प्रशंसाहेतुभिः प्रकारैः आधिक्ये सत्यपि सूक्ष्माचारपरिज्ञानवैभवादेव हि कुलान्तरापेक्षया श्रीवैष्णवकुलमन्येऽपि प्रशंसन्ति । अतः कालादिदोषात् तद्भ्रंशो मा भूदित्यस्माभिरत्र दिक् प्रदर्शिता । इति सर्वमनवद्यम् ॥

इत्थं शिष्टसमाचारं स्मृतिं चालोच्य संयमी ।
रङ्गरामानुजाभिख्यः कृतवान् कृतिमुत्तमाम् ॥
त्यजतो वैष्णवकुलं सूक्ष्माचारस्य संप्रति ।
स्थापनार्था कृतिर्भूयात् सतामादरभाजनम् ॥

॥ हेयोपादेयदर्पणः संपूर्णः ॥
श्रीमते वेदान्तरामानुजमहादेशिकाय नमः ॥

---

श्रीमते रङ्गरामानुजमहादेशिकाय नमः ॥
शुभमस्तु

ஸ்ரீ:

பையம்பாடி ஸ்ரீமான் மீமாம்ஸா சிரோமணி

ஹிந்தி பண்டித எஸ். கிருஷ்ணஸ்வாமி

செய்த மொழிபெயர்ப்பு.

ஸ்ரீமதே ரங்கராமாநுஜ மஹாதேசிகாய நம:

# ஹேயோபாதேய தர்ப்பணம்

[விட வேண்டுவன செய்ய வேண்டுவன
காட்டும் கண்ணாடி]

காலதேசங்கள் அனுகூலமாக இராமையால் நித்யகர்மங்களை உள்ளபடி அனுஷ்டிக்க முடியாமல் சுருக்கமாகச் செய்ய விரும்பிய பரமாஸ்திகர்களான ப்ரபன்னர்களுக்காக லக்வாஹ்னிகத்தில் ப்ராஹ்மமுஹூர்த்தம் தொடங்கி இரவில் படுக்கப் போகும் வரை செய்ய வேண்டுமவற்றிற்கு முன்னோர்களின் மொழிகளையும் யுக்திகளையும் கொண்டு அநுஷ்ட்டான வகைவரையப்பெற்றது. சக்தர்களுக்கு ஒருவழியும், அசக்தர்களுக்குப் பிறிதொரு வழியும் எப்பொழுதுமே அநுஷ்ட்டானத்தில் ஏற்கப்பட்டிருக்கிறது. இந்த க்ரந்தத்தில் அந்தந்த ஸந்தர்பங்களில் ஏற்க வேண்டிய சில ஸூக்ஷ்மாமசங்களையும் சில விடக்கூடியவைகளையும் சுருக்கமாக விளக்கிக் காட்டுவோம்.

## மலஜலம் கழித்தல்

மலஜலம் கழிககப் போவதற்கு முன் தொடங்கி ப்ரக்ஷாளனம் (கழுவல்) வரை இடுப்பிலுள்ள

வஸ்த்ரத்தைத் தொங்க விடாமல் மேலே தூக்கிப் பிடித்திருக்கவேண்டும். குடை, பாதரக்ஷை தரித்தல் கூடா. லிங்கத்தை ப்ரக்ஷாளனபவரை இடது கையால பற்றிக் கொண்டே செல்ல வேண்டும். வாய் கொப்பளிக்கும்வரை மற்ற அவயவங்களைத் தொடுவதும் அடிக்கடி காறித் துப்புவதும் கூடா. ஈரவஸ்த்ரத்துடன் மல மூத்ர விஸர்ஜனம் செய்வது தகாது ஏழு காற்றுப்பட்ட ஈரவஸ்த்ரம் உலர்ந்ததற்கு ஸமானமாகும்.

## சௌசப்ரகரணம்

கூடியவரை வடக்கு முகமாய் ஜலத்தினின்று ஜாண் தூரத்தில் உட்கார்ந்து ப்ரக்ஷாளனம் செய்வதாம். இரு கைகளையும் மண்ணைக் கொண்டு சுத்தி செய்யும்வரை கையோடு கை சேர்க்கலாகா. மண முழுமையும போகும்வரை ப்ரக்ஷாளனம் செய்து கொள்ள வேண்டும். மண் இடுவது பன்னிரண்டு முறை. மண் இல்லாத போது மணலாம. அப்போது எண்ணிக்கை இரட்டிக்கும. மலஜலம் கழிக்கச் சென்ற விடத்தில் அது நேராதபோது பாதி எண்ணிக்கையில் சௌசம் போதுமானது. குதத்தில் விரல் புகுத்தி (மலமில்லாமை கண்டு) ப்ரக்ஷாளனம் செய்க. இவ்வாறு லிங்கத்திலுள்ளும் கிருஹஸ்தன் சௌசம செய்யவேண்டும. முடிவில் நகங்களின் இடுக்குகளை நன்கு சுத்தம் செய்க. சௌசவிடத்தையும் மண் இல்லாதபடி சுத்தம செய்யவேண்டும்.

### கண்டூஷப்ரகரணம்

இடது பக்கத்தில் தரைமீது கொப்பளிக்க வேண்டும். ஜலத்திலோ இடது கையிலோ கொப்பளித்தல் கூடா கை நிறைய தீர்த்தம் எடுத்து கண்டூஷம் செய்யவேண்டும். நுனிக்கையால் ஜலம் எறிந்து செய்வது தகா. கண்டூஷஸமயத்தில் விரலால் நாக்கை வழிப்பது தகாது. கண்டூஷ ஜலத் துளிகள் உடலில் படாதவாறு கவனத்துடன் செய்யவேண்டும். கொப்பளித்த விடத்தையும் ஜலம் இறைத்து சுத்தமாக்குக.

### ஆசமனப்ரகரணம்

ஜலத்தை இறைத்து சுத்தம் பண்ணின ஜலக் கரை மீது குக்குடாஸநமாய் இருந்து ஆசமனம் செய்பவேண்டும். அசுத்தமாக இருப்பவர்களைப் பார்த்தும், பேசிக் கொண்டும், நின்றும், தெற்கு மேற்கு முகமாகவும், தலை விரித்தும், தலை மூடியும், கழுத்து மூடியும், கை கால் சுத்தம் செய்யாமலும், அவஸரகோலமாகவும், கவனக் குறைவாகவும் ஆசமனம் செய்யக் கூடாது. உஷ்ண ஜலத்தால் ஆசமனம் செய்வது ஒருபொழுதும் தகாது. முழங்கால் அளவு ஜலத்தில் குனிந்திருந்தும் ஆசமனம் செய்யலாம். முடி, கச்சம் அவிழ்ந்த போதும், யஜ்ஞோபவீதம் தோளைவிட்டகன்ற போதும், இரத்தம் மூக்கு கண் காது மலங்கள் கண்ணீர் மயிர் நெருப்பு இவற்றைத் தொட்டாலும், அந்தணர் மேல் பட்டாலும், காறிதுப்பினு

லும், தும்பினாலும், கொட்டாவி விட்டபோதும், அப்ராஹ்மணர்களுடன்பேசினாலும் வழி நடந்து வந்த பிறகும், அழுதாலும், அதிகச் சிரிப்பிலும் ஆசமனமாம், ச்ரோத்ராசமனமாவது செய்யவும். [ப்ரணவத்தைச் சொல்லி மூக்கையும் வலக் காதையும் தொடுகை ச்ரோத்ராசமனமாம்] அப்ராஹ்மணர்களுடன் பேசும்போது பூணூல் நிவீதமாக இருக்கவேண்டும். பிறகு உபவீதமாக்கி ஆசமனம் பண்ணவும். பல் துலக்கல், ஸ்நானம், பூஜை. போஜனம் முதலானவற்றிற்கு முன்னும் பின்னும் இரண்டு தரம் ஆசமனம். ஸந்த்யோபாஸனம், ஹோமம், ஜபம் முதலானவற்றிற்கு முன் இரண்டு தரம்; பின்னே ஒருதரம். வெளியே போய் வருதல், வாய் கொப்பளித்தல். வஸ்த்ரம் தரித்தல், தும்பல், நித்ரை, பேசத்தகாதாருடன் பேசுதல், ஏதேனும் உட்கொள்ளுதல், பருகுதல் இவற்றிற்குப் பின்னே இரண்டு முறை ஆசமனம். ஜலமில்லையேல் ச்ரோத்ராசமனமாவது இரண்டு முறை. விஹித்த கர்மாக்களைத் தொடங்கு முன் இரண்டு தடவை ஆசமனம்.

## தந்ததாவனப்ரகரணம்

குனிந்தும நிற்காமல் குக்குடாஸநமாய், கிழக்கு வடக்கு வடகிழக்கு முகமாய் தந்ததாவனம் (பல் துலக்குதல்) செய்யவும். இடது பக்கம் கீழ்வரிசை தொடங்கி ப்ரதக்ஷிணமாகச்செய்ய வேண்டும். ஜபகாலத்தில்போல் நன்றாக உட்கார்ந்து

செய்ய வேண்டாம். ஞாயிறு செவ்வாய் வெள்ளி சனி வாரங்களிலும், பர்வம், ப்ரதமை ஷஷ்டி அஷ்டமீ நவமி ஏகாதசி அமாவாஸ்யை திதிகளிலும் ஜன்மநக்ஷத்ரநாளிலும் குச்சியால் பல் துலக்கலாகாது. குச்சி கிடைக்காத போதும், கூடாத காலத்திலும் மா முதலாம் இலைகளால் செய்திடுக. ச்ராத்தாதி தினங்களில் தந்ததாவனம் செய்யலாகா. அப்போது பவித்ரவிரல், கட்டைவிரல் இவற்ருல் பற்களைத் தேய்த்து பன்னிருதரம் வாய் கொப்பளிப்பது. நதி, தேவாலயம், மாட்டுத் தொழுவம் முதலான இடங்களில் தந்ததாவனம் கூடா. எண்ணெய் தேய்த்துக் கொண்டும், செருப்புடனும், க்ஷவரம் செய்து கொண்ட பின்னும் ஆஸனத்தில் அமர்ந்தும், பூணூலை உபவீதமாகக் கொள்ளாமலும் அது செய்வது தகா. கண்டூஷத்திற்குப் பின் கண்கள் மூக்கு இவற்றை இடது கையால் சுத்தி செய்து கை முதலானவற்றை மண்ணால் தேய்த்து அலம்புக. தந்ததாவனஸ்த்தல-கண்டூஷ ஸ்த்தலங்களையும் சுத்தம் செய்திடுக.

### ஸ்நாநப்ரகரணம்

ஸ்நாநாங்கஸங்கல்ப ஸாத்விகத்யாகங்களை உட்கார்ந்தே செய்வதாம். திருவாராதனம், மந்த்ரஜபம், ஹோமம், ப்ரஹ்மயக்ஞம், ச்ராத்தம், ஸ்நாநம், தானம், யோகம் இவற்றைத் தொடங்கும் போது மூன்று ப்ராணாயாமங்கள் செய்யவும்.

காயத்ரீஜபத்தின் தொடக்கத்திலும் முடிவிலும் மூன்று ப்ராணாயாமங்கள். ஸந்த்யோபாஸநம், அர்க்யப்ரதானம் செய்யும் முன் ஒரு தடவையாம். மற்ற விடங்களிலும் பெரும்பாலும் ஒரு தரமே. காற்றை உள்ளே வாங்கிக்கொண்டு கும்பகம் செய்தவண்ணம் ஒவ்வொன்ருக ப்ரணவத்துடன் ஸப்தவ்யாஹ்ருதிகளையும், ப்ரணவத்துடன் காயத்ரியையும், அதன் சிரஸ்ஸையும் சேர்த்து மனத்தில் மும்முறை சொன்னபிறகு கும்பகத்தை விட்டு வலது காதைத் தொடவும். இவ்வளவும் ஒரு ப்ராணாயாமமாம். நதியில் காலையில் ப்ரவாஹம் வரும் திசை பார்த்தும், வேறு ஸமயத்தில் ஸூர்யனைப் பார்த்தும் நீராட வேண்டும். நீராடும் போது ஈர வஸ்த்ரத்தால் முகம் முதலான இடங்களைச் சுத்தம் செய்யலாகா. கால்களின் அழுக்கை யெடுக்க காலோடு கால் சேர்த்து உராய்தல் செய்ய வேண்டா. ரொதப்பூம் கீழ்பாகங்களை இடது கையாலேயே சுத்தம் செய்திடுக. முதுகு தேய்க்கப் பிறர் உதவி பெற வேண்டாம். பூணூலை மாலையாக போட்டுக்கொண்டு சுத்தப்படுத்தல் தகா. உபவீதமாக்கி ப்ரதக்ஷிணமாகவே கசக்கி சுத்தம் செய்க. ஸ்த்ரீ, சூத்ரர், பதிதன், அனுபநீதன், ரோகி, பாஷண்டி, அசுசி முதலானவர்களுடன் ஒரே துறையில் ஸ்னானம் செய்ய வேண்டா. கடைசி முழுக்குக்கு முன் இருகையால் மும்முறை ஜலமெடுத்து ஸ்வாசார்ய ஸ்ரீபாத தீர்த்த

மாக த்யானித்துத் தலையில் சேர்த்துக் கொள்க. தனது ஆசார்யப்ராசார்யர்களின் திருநாமங்களை கீர்த்தனம் செய்து கொண்டு ஜலத்தில் அமிழ்ந்து நீராடவும். கட்டைவிரல்களால் காதுகளையும், சுண்டுவிரல்களால் மூக்கு த்வாரங்களையும் மூடிக் கொண்டு ஸ்நானம் செய்ய வேண்டும். பிறகு குடுமியை முன்புறம் தொங்க விட்டுக்கொண்டு கரை சேர்ந்து இருதரம் ஆசமனம் செய்து, குக்குடாஸனமாய், துணியால் தலையைத் துடைத்து, துணியை நனைத்துப் பிழிந்த பின்னே மற்ற அவயவங்களையும் துடைத்திடுக. கையால் தலைமயிரைப் பிழிய வேண்டா. துணியால் தலையைக் கட்ட வேண்டா. அரைத் துணியின் ஒரு பாகத்தாலோ மேல்துணியாலோ கையாலோ உடம்பைத் துடைக்க வேண்டா. ஜலம் நீங்குவதற்காக மயிரை உதறவும் வேண்டா. நுணிமயிரைத் துணியால் தட்டக் கூடா. பூணூலைத் துணியால் துடைக்க வேண்டா. மார்பைத் துடைக்கும் போது பூணூலை வழக்கப்படிக்கு மாறுகபோட்டுக் கொள்ள வேண்டா. தலைமயிரை நுனியில் முடியாமல் வழக்கப்படி பவித்ரமுடியாக முடித்துக் கொள்க.

## வஸ்த்ரதாரணப்ரகரணம்

கிழக்கு அல்லது வடக்கு முகமாக வஸ்த்ரம் தரிக்கவாம். அரைவேஷ்டி, மேல்வேஷ்டி மாறுமல் இருக்கவேண்டும். வெளுத்த வஸ்த்ரம் தரித்தே

வைதிக கர்மங்கள் செய்யவும், கம்பளம், சிவப்பு வஸ்த்ரம் போன்றன தரித்து அவை செய்ய வேண்டா. ஈரத் துணியை இடுப்பிலிருந்து அவிழ்த்து சுத்தமான ஸ்த்தலத்தில் வைத்திடுக. தண்ணீரில் வீசி யெறிய வேண்டா. மாந்த்ர-மாநஸாதி ஸ்நாநத்திற்குப் பின் ப்ரோக்ஷித்து அதனைப் பக்கத்தில் வைத்திடுக. ப்ரோக்ஷணத்திற்கு முன் தொட வேண்டா. முதலில் முன் கச்சமும், பிறகு பின்கச்சமும் வைத்து ஐந்து கச்சமாக வேஷ்டி தரித்துக் கொள்க. அரையில் தரிக்கப்படும் வேஷ்டி நாளுக்கொரு பக்கமாக உட் பக்கம் மேல்பக்கமாக மாறுமல் இருக்க வேண்டும். முன்னுலோ பின்னுலோ வால்கச்சம் வைக்க வேண்டா. மலவிஸர்ஜன-தந்ததாவன-வஸ்த்ர தாரணகாலங்களில் மேலங்கவஸ்த்ரம், தலையில் கட்டப்பட்டிருக்கவேண்டும். ஸ்னனம், திருமண் இட்டுக்கொள்வது, உபஸ்த்தானம், திரு வீதி எழுந்தருளும் எம்பெருமானை ஸேவித்தல், ஸர்வவித தர்ப்பணம், வஸ்த்ர நிஷ்பீடனம், ச்ராத்தம், ப்ரதக்ஷிணம், ப்ரணமம் இக்காலங்களில் உத்தரீயம் இடுப்பில் ப்ரதக்ஷிணமாக தரிக்கப்பட வேண்டும். கச்சம் மறைக்கப்படாமலும் இருமுனை களைத் தொங்கவிடாமலும் உத்தரீயம் தரித்துக் கொள்க. மந்த்ரஜபம், ப்ரஹ்மயக்ஞும், திருவாராதனம்,போஜனம்,சுத்திக்காம் ஆசமனம்,ஹோமம் முதலான காலங்களிலும், ஆலயத்திலும் உத்தரீ

யத்தைப் பூணூல் போல் அமைத்துக் கொள்க. ஆசார்யன் ஸந்நிதியிலும் அர்க்யப்ரதான காலத்திலும் இடுப்பில் சுற்றியோ, யக்ஞோபவீதமாகவோ இருக்கலாம். மற்ற ஸமயங்களில் பெரியோர் அநுஷ்ட்டானப்படி ஸௌகர்யப்படி இருக்கலாம். இங்கே தெளியவேண்டுவன யாவும் எமது வஸ்த்ரோபவீத प्रदीप க்ரந்தத்தில் காண்க. ஒரு போதும் மேல் அங்க வஸ்த்ரத்தால் கழுத்தை மறைக்கவேண்டா. மாலை போலவும் போட்டுக் கொள்ளவேண்டா. உத்தரீயத்தில் உட்காரலாகா. விசிறியாக அதை உபயோகப்படுத்துவது தகா. கண நேரமும் கச்சமின்றியோ தலைமுடி அவிழ்ந்தோ இருக்கலாகா.

## புண்ட்ரதாரணப்ரகரணம்

கிழக்கு அல்லது வடக்குமுகமாக உட்கார்ந்தே திருமண் இட்டுக் கொள்க. இடது கையில் முதலில் திருமண்கட்டியை வைத்து, பிறகு ஜலம் சேர்த்து குழைக்கவும். ஜலத்தில் முகம் பார்த்தும், விரலில் பவித்ரத்துடனும், உயர்ந்த ஆஸனத்தில் உட்கார்ந்தும் இட்டுக் கொள்ளக் கூடா. எங்கும் கீழ் பக்கம் ஆரம்பித்து மேல்நோக்கி இட்டுக் கொள்க. குழைத்த மண் தீர்ந்துபோகும் முன்னமே வேண்டுமாகில் திருமண் குழைத்துச் சேர்க்க. வலதுகைவிரல் தவிர மற்ற ஸாதனத்தாலும் நகத்தாலும், பிறரைக்கொண்டும் திருமண் இடலாகா. புருவங்களுக்கு நடுவில் கீழிலிருந்து

வளைவாகத் தொடங்கி மேல் நோக்கி, அம்பு விழு தூரத்திலிருப்பவரும் காணும்படி கனமாகவும் ப்ரகாசமாகவும் இட்டுக் கொள்க.

### ஸந்த்யோபாஸநாதி ப்ரகரணம்

அந்தந்த இசைப் பக்கம் திரும்பி தேவர்ஷி பித்ருதர்ப்பணம் செய்க. கையைமட்டும் திருப்பி அது செய்வது தகாது. ஸர்வதர்ப்பணங்களிலும் ஜலாஞ்ஜலியை கோச்ருங்கம் (மாட்டுக் கொம்பு) அளவு தூக்கி விடுக. சந்தோந்யாஸகாலத்தில் நாக்கைத் தொடாமல் அதற்கு முன் விரல்களைக் காட்டுக. வ்யாஹ்ருதிகளுக்கான அங்கந்யாஸ காலத்தில் நாபியின் கீழ் பாகங்களிலும் அவ்வாறே தொடாமல் காட்டவும். "ஆபோஹிஷ்டா" முத லான ப்ரோக்ஷணகாலத்தில் முதலில ப்ரணவம் முதலானவற்றால் ப்ரோக்ஷணம் மறக்காமல் செய் திடுக. (இரண்டு கைகளிலும) கட்டை விரலையும் ஆள்காட்டி விரலையும் சேர்ப்பது ராக்ஷஸமுத்ரை யாம். இம் முத்ரை அர்க்யம் விடும்போதும் கேச வாதி தர்ப்பணத்தின்போதும கூடா. அவ்விடத்தி னின்று நாற்பது அடி தூரத்துக்குள்ளான இடத் திலேயே ஜபம செய்க. காலையில் ஸூர்யனைப் பார்த்து நின்று கொண்டு, அசக்தி அதிகமாயில் வடக்கு முகமாக உட்கார்ந்து செய்க; கிழக்கு முகமாக உட்கார்ந்து ஜபம் செய்யலாகாது. மத் யாஹ்நத்தில் கிழக்கு முகமோ வடக்கு முகமோ நின்று செய்வது; அசக்தியில் கிழக்கு முகமாக உட்

கார்ந்து செய்க. ஸூர்யன் மேற்கு பக்கத்திலிருந் தால் வடக்கு முகமாக உட்கார்ந்து செய்க. ஸாயங் காலத்தில் மேற்கு முகமாகவோ வடக்கு முகமாக வோ சக்தரும் அசக்தரும் உட்கார்ந்தே செய்க. காயத்ரீ தவிர மற்ற மந்த்ரங்கள் யாவும் உட்கார்ந் தே அப் முகமாகவே செய்வதாம். தேவாலயஸமீப த்தில் ஸந்த்யோபாஸனம் செய்யும்போது அர்க்ய தானம், ஜபம, உபஸ்த்தானம, இவை எந்த திக்கா னாலும் எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் பக்க மாகவே பெருமானுக்கு பின்புறம காட்டாமல் செய்திடுக. உபஸ்த்தானத்துக்குப் பின் எல்லா திக்குகளின் நமஸ்காரம் கூட எம்பெருமான் பக் கம் நோக்கியே செய்ய வேண்டும். அர்க்யதானத் திற்குப் பின் செய்ய வேண்டிய ப்ரதக்ஷிணம் தேவ ஸமீபத்திலும் வழக்கப்படியே செய்க. கைகளை வஸ்த்ரத்தால் மூடாமலும், ஒரு கை மூடி மற்றதை வெளியே வைத்தும், தலையை மூடிக் கொண்டும், சொக்காய் போட்டுக் கொண்டும், கழுத்தை மூடி யும், பேசிக் கொண்டும் ஜபம் செய்யலாகாது. ஆசார்யன், பாகவதன், ஜலம், அக்னி ஸூர்யன், அரசமரம், தேவாலயம் முதலானவற்றிற்குப் பின் புறம் காட்டாமல் அபிமுகமாய் இருந்து ஜபம் செய்க. நாபிக்குக் கீழே தொட நேர்ந்தால் கை அலம்ப வேண்டும். அசக்தனாகில் வலதுகாதைத் தொடலாம். உதட்டை தொட்டாலும், குத-லிங்க- பாதஸ்பர்சம் ஏற்பட்டாலும் கையை நன்கு

அலம்புக. கைகளைச்சேர்க்காமல் கைவிரல்களை (இணைத்து) சேர்த்துக் கொண்டு ஜபம் செய்ய வேண்டும். ஜபகாலத்தில் "வரேண்யம்" என்பதை "வரேணியம்" எனப் பிரித்து ஜபம் செய்யவும். காலையில் மூக்குக்கும், மத்யாஹ்நத்தில் மார்புக்கும், மாலையில் நாபிக்கும் நேராகக் கைகளை வைத்துக் கொண்டு ஜபம் செய்ய வேண்டும்.

முக்கால ஸந்த்யோபாஸந உபஸ்த்தான காலங்களிலும் "மித்ரஸ்ய" "ஆ ஸத்யேந" "இமம் மே" என்ற மந்த்ரங்களுடைய ரிஷ்யாதி ந்யாஸம் அவசியம் செய்ய வேண்டும். ஸந்த்யா நமஸ்காரகாலத்தில் ஸந்த்யையை, பிறகு காயத்ரியை, பிறகு ஸாவித்ரியை பிறகு ஸரஸ்வதியை நமஸ்காரம் செய்யவும். முடிவில் ஒரு தடவை ஆசமனம் செய்து ஸாத்விகத்யாகம் செய்க. அவ்வப்போது ஜபம் முடிந்த பின் அந்த ஸ்த்தலத்தை வ்யாஹ்ருதிகளைச் சொல்லி ப்ரோக்ஷித்த பின்னரே மேற் கொண்டு கர்மங்கள் ஆரம்பம் செய்வதாம். மீண்டும் இரண்டு ஆசமனங்கள் செய்து திருவஷ்டாக்ஷரஜபம்; பிறகு ஆசமன-ஸாத்விகத்யாக-ஸமர்ப்பணங்கள் தனித்தனியே செய்து, பிறகு ஆசமனத்துடன் ஆதாரசக்த்யாதி தர்ப்பணம் தேவர்ஷி காண்டர்ஷி பித்ரு தர்ப்பணம் செய்க. பிறகும் அவ்வாறு செய்து ப்ரஹ்ம யஜ்ஞம் தொடங்கவும். எமது ஆஹ்நிகதர்ப்பணத்தில் பார்க்க. காலையிலேயே ப்ரஹ்மயக்ஞமும் சேர்த்து

அநுஷ்டிக்க முடியாதபோது ஸந்த்யோபாஸனம் திருவஷ்டாக்ஷரஜபம் வரை முடித்து விட்டு, மத்யாஹ்நத்தில் ஸந்த்யோபாஸன–திருவஷ்டா க்ஷர ஜபங்களுக்குப் பின் அடைவாக ஆதாரசக்த் யாதி தர்ப்பண-தேவாதி தர்ப்பண ப்ரஹ்மயஜ்ஞங் களை செய்திடுக. காலையிலேயே ஆதாரசக்த்யாதி தர்ப்பணம் வரை செய்தும் நிறுத்தலாம். மத்யா ஹ்நத்தில் ஸந்த்யோபாஸனம் திருவஷ்டாக்ஷர ஜபம் முடிந்த பின் தேவாதி தர்ப்பணத்துடன் ப்ரஹ்மயஜ்ஞம் செய்க. காலை தேவாதி தர்ப்ப ணம், மதயாஹ்நத்தில் ப்ரஹ்மயஜ்ஞம எனப் பிரித்து செய்வது வேண்டாம். ப்ரஹ்மயக்ஞ காலத்தில் உட்கார்ந்து கொண்டே புருஷஸூக் தம்வரை ஜபிக்கவும்.

## பகவத்ஸேவாப்ரகரணம்

திவ்யதேசத்தில் வஸிப்பவன் காலையிலோ மாலையிலோ ஆலயம் சென்று எம்பெருமானை ஸேவிப்பதாம். பகவத் ஸந்நிதியிலும், ஆசார்யாதி பரமபாகவத ஸந்நிதியிலும், கை தட்டுதல்,சிரிப்பு, அழுகை, வம்பளப்பு, அபானவாயு பிரித்தல், காரித துப்புவது, கொட்டாவி விடுகை, கோபம், உறக்கம், தும்மல் எல்லாம் தகா. ப்ரதக்ஷிண ப்ரணாமங்களின் எண்ணிக்கை ஸமமாக இருக்க வேண்டும். இங்கே ப்ரணாம எண்ணிக்கை விஷயம ஆஹ்நிகதர்ப்பணத்தில் காண்க. கை கோத்துக் கொண்டோ வேகமாகவோ பகவத்

த்யானமின்றியோ ப்ரதக்ஷிணம் பண்ண வேண்டா. சக்தன் தண்ட ப்ரணாமங்களையே செய்யவும். அசக்தன் அஷ்டாங்கம், ப்ரஹ்வாங்கம், தலைமேல் கைகூப்புதல் ஸம்புடம் என்பவற்றில் ஒன்றேனும் செய்யவும். தண்டாங்க-அஷ்டாங்க-ப்ரணாமங்களில் ஆரம்பத்திலும் முடிவிலும் ப்ரஹ்வாங்காதிகள் மூன்றும் உண்டு. இவற்றுள் தண்டாங்க ப்ரணாமமாவது பூமியில் தண்டம் (தடி) போல் உடலை வைத்து (கீழே விழுந்து) கை கால்களை நீட்டி, சேர வைத்துக்கொண்டு அஞ்ஜலியுடனிருக்கை. அஞ்ஜலியாவது கை குவிப்பது. கீழே விழுந்து தண்டப்ரணாமம் செய்யும் போதும் கை குவிப்பது முக்யமாம். மற்றவற்றில் நின்று அஞ்ஜலி, இதில் நீட்டி பூமியில் அஞ்ஜலி என்ற வேறுபாடே. இவ்வாறின்றி பூமியில் கைகளைப் பரப்புவதே என்பதில்லை. இங்கேயும் தெளிவு வேண்டுமவர் தர்ப்பணத்தில் காணலாம். அஷ்டாங்க ப்ரணாமத்திலும் கை குவித்திருப்பது இவ்வாறே. ஆமை போல் கை கால்கள் அடங்கியிருப்பது மட்டும் வித்யாஸம். தலைமேல் கை வைத்து அஞ்ஜலி செய்வது மஸ்திஷ்கம். மார்பில் அதை வைப்பது ஸம்புடம். குனிந்திருந்து செய்கை ப்ரஹ்வாங்கமாம். பகவத் ஸந்நிதியில் பெரியோரையும், பெற்றோரையும் கூட ப்ரணாமம் (கீழே விழுந்து) செய்ய வேண்டா. மஹாபாகவதனுக்கு அப்போது

ப்ரதமதர்சனமானால் அவச்யம் ப்ரணாமம் செய்யவும். ஸ்வாசார்யனோடு இருக்கும் போது அதுவும் வேண்டா. ஸ்வாசார்யனோடு ஆலயம் வந்தால் சிஷ்யன் பகவானை ப்ரணாமம் செய்ய வேண்டா. வ்ரததினங்களில் பகவத்ப்ரஸாதமாகக் கிடைக்கப் பெற்றாலும் கந்தபுஷ்பாதிகளைத் தான் உபயோகப்படுத்திக் கொள்ளாமல் மரியாதையோடு அவற்றைப் பெற்றுத் தகுந்தவர்களுக்குக் கொடுத்து விடலாம். எம்பெருமான் கிழக்கு தெற்கு முகமாக எழுந்தருளியிருந்தால் வலது பக்கம் இருந்து தர்சன ஜபாதிகள் செய்க. வடக்கு மேற்கு முகமாக எழுந்தருளியிருந்தால் எந்தப் பக்கமும் நின்று தர்சனாதிகள் செய்யலாம்.

## ஔபாஸநப்ரகரணம்

பிரதி தினமும் ஔபாஸநம் செய்யவேண்டும்.

ஒரு மாதகாலம் மண் இல்லாமல் மூத்ர சௌசம் செய்தால், ஒருபக்ஷம் ஔபாஸனம் பண்ணாமலிருந்தால், ஏழு நாட்கள் தொடர்ந்து உஷ்ண ஜலத்தில் ஸ்நானம் செய்தால் ப்ராஹ்மணன் சூத்ரனுக்கு ஸமானமாம். ஔபாஸனம் பண்ண முடியாத போது அந்தந்த மாத முடிவுக்குள் பரிஹாரமாக ஐந்து படியரிசி ஸ்வதர்மாநுஷ்டானத்தில் ச்ரத்தையுள்ளவனும் ஏழையுமான ஸ்ரீவைஷ்ணவ ப்ராஹ்மணனுக்கு தானமாக கொடுக்க வேண்டும். வருஷ முடிவிலாவது அறுபது படியளவு அரிசி தானம் செய்யவும்,

தண்டுல (அரிசி) தானம் செய்ய அசக்தனுகில் பாபம் வந்தே தீரும்.

### காலே அபிகமனப்ரகரணம்

ஔபாஸநம் முடிந்த பின் ஸ்வார்ச்சா கிருஹம் (தான் பூஜை செய்யுமிடம்) சென்று குரு பரம்பரானுஸந்தானம் செய்து த்வாரபாலகர்களை வணங்கி, 'கௌஸல்யா' முதலான ஸ்ரீஸூக்திகளால் எம்பெருமானைத் திருப்பள்ளி யுணர்த்தி யதாசக்தி ஆராதித்து நமஸ்காரங்கள் செய்து த்வயம் சொல்லி, 'ஸ்வாமின்! இன்று தொடக்கமாக தேவரீருக்கு அநுகூலனுகிறேன். தேவரீரது ஆஜ்ஞையை மீறுகை என்னும் ப்ராதிகூல்யத்தைத் தவிர்த்திருப்பேன். கைங்கர்யவிரோதிவர்கம் விலக தேவரீரைத் தவிர்த்து அடியேனுக்கு வேறுவழியில்லை. தேவரீர் அடியேனை ரக்ஷித்தே தீருமென பூர்ணமாய் விச்வஸிக்கிறேன். அடியேனைக் காத்தருளவேணுமென ப்ரார்த்தனை. தேஹாதிகளைக்காட்டிலும் விலக்ஷணமான (வேறுன) ஆத்மாவாகிய அடியேனும். (தாஸனுன) எனது உடமைகளும் ஸ்ரீமானுய் ஸர்வஸ்வாமியாயிருக்கும் தேவரீருடையவையே. எனக்கு உரிமை கிடையாது. கைங்கர்யவிரோதிகளைப் போக்கவேண்டிய பொறுப்பு தேவரீருடையதே. எனக்கு அதில் அந்வயம இல்லை. இதனுடைய பலமும் ப்ரதான போக்தாவாயும் ஸ்ரீமந்நாராயணனுமான தேவரீருடையதே.

என்னுடையதல்ல' என்று ஸாங்கப்ரபத்தி செய்து, 'நீ ஸம்சயமே யில்லாமல் நிம்மதியாய் இரு' என அவன் திருவாய்மலர்ந்தருளினதாக பாவித்து, ப்ரணமங்களைச் செய்வதாம். அசக்தர் லக்வாஹ்நிகத்தில் சொன்னபடி பிரார்த்திப்பர்.

உபாதானப்ரகரணம்

இந்த காலத்தில் திருவாராதனத்திற்கு வேண்டும் துளஸீ—புஷ்ப—சந்தனாதிகளை நியாய மான வழியில் யதாசக்தி தானே ஆவலுடன் சேகரிக்க வேண்டும். அசக்தன், ஸ்வதர்மாநுஷ் டானத்தில் ஊற்றம் உள்ள ஸ்ரீவைஷ்ணவர் மூலம் கொள்ளலாம். உதவியவருக்கு யதாசக்தி தானம் செய்வது. பதிதன்—பாஷண்டி—நபும்ஸகன்—திருடன்—அநுபநீதன் — பஞ்சஸம்ஸ்காரமாகாத வன்—ஸ்த்ரீ—சூத்ரர்-பகவத் பக்தி இல்லாதவர்-அசுத்தரானவர்—இப்படிப்பட்டவர் கொடுத்தா லும் பெற்றுக் கொள்ள வேண்டா. இல்லாத போது சுத்த தீர்த்தத்தாலேயே க்ருஹஸ்தன் உள்பட எல்லோரும் பூஜிப்பதாம். துளஸி கிடைக் காத போது ஏழு தடவை அதன் நாமத்தைச் சொல்லவும். இப்படி தர்ப்பம், ஸமித்து எல்லா மும் யோக்யர்மூலமே பெற வேண்டும். உபா தானகாலத்திற்குள் எல்லாம் சேகரிக்க வேண் டும். துளஸி முதலாமவற்றை ஆமணக்க இலை யிலோ கையிலோ வஸ்தரத்திலோ பெற்று வரலா காது. தாமரை, நெய்தல் போன்ற ஜலபுஷ்பங்கள்

இரண்டு தினங்கள் வரை சுத்தங்களாம். மல்லி, முல்லை முதலிய ஸ்தலபுஷ்பங்கள் ஒருநாள் முழுக்க சுத்தங்கள். அவையும் மாலையாக ஸரமாக கோக்கப் பெற்றிருந்தால் இரண்டு தினங்கள் சுத்தங்களாம். தொடுக்காத மலர், மணல் ஸம்பந்தமில்லாத நீர், தைலஸம்பந்தமில்லாத அன்னம் மறு தினத்துக்கு ஆகா. மறு தினத்துக்காக தீர்த்தம வைத்துக்கொள்வதாகில் குடத்தில் சிறிதளவு மணல் சேர்ப்பது. துளஸி கொண்டு வருமவர் அத்துடன் கால்களை அலம்பக் கூடா. மற்றவரை ப்ரணமம் செய்யக் கூடா. வேறொரு வரும் இந்த அதிகாரியை ப்ரணமம் செய்யலாகாது. இப்படி வஸ்துக்களை யதாசக்தி ஸம்பாதிப்பது போல் ஆத்மகுணங்கள் வளர பரமபாகவதரோடு ஸம்பாஷணமும், வேதாந்தக்ரந்தங்களை ஸேவிப்பதும் செய்ய ப்ராப்தம். இது முக்கியம்.

## இஜ்யாப்ரகரணம்

சுத்தனேயாகிலும் மாத்யான்னிகஸ்நானம் செய்ய வேண்டும். அசக்தனை போது ஈரத் துணியால் தேஹத்தைச் சீராகத் துடைத்துக் கொண்டு, அன்று உலர்த்திய வஸ்த்ரம் தரித்து, மாந்த்ர - மானஸ - ஸ்நானங்கள் செய்து மாத்யாஹ்நிகஸந்த்யோபாஸநாதிகள் செய்வது. வேறொருவருடைய வஸ்தரம், ராத்ரியில் உடயோகித்த கம்பளம் முதலியன, கோணி நூல், காகிதம், படுக்கை, தலையணை, பாலன், கன்னி, ஸ்த்ரீ, முன்

தினம் உலர்ந்த வஸ்த்ரம் என்பவற்றையும், அசுத்தம் என்று பெரியோர் குறிக்கும் மற்றவற்றையும் தொட்டால் பகவதாராதனத்திற்கு ஸ்நானம் செய்ய வேண்டும். காலையில் செய்ய வேண்டிய க்ருத்யங்களை முன்தினம் உலர்ந்த வஸ்த்ரம் தரித்துச் செய்வதில் தோஷமில்லை. தூங்கிய பின்னும், அழுத பின்னுமாகில், ஆராதனத்திற்காக ஸ்நானம் செய்திடுக. அசக்தர்களுக்கு மானஸ ஸ்நானமே உஷ்ணோதகத்தாலுமாம்.

மாத்யான்னிகத்தில் ஸூர்யனைக் காணச் செய்யும் வ்யோம முத்ரையாவது—

இருகை ஆள்காட்டி சுண்டுவிரல்களை நீட்டி நடுவிரல் மோதிரவிரல்களை மடக்கி, நிமிர்த்த, இடக்கை விரல்களின் மேல் அவ்வாறே யாக்கின வலக்கைவிரல்களை வைத்து, வலது ஆள்காட்டியின் மேல் நீட்டிய இடது நடுவிரல் ஆள்காட்டிகளை வலக்கட்டை விரலால் அழுத்தி, இடது ஆள்காட்டியின் பின்புறத்தில் நீட்டிய நடுவிரல் ஆள்காட்டிகளை இடது கட்டை விரலின் மேல் பதிய வைப்பதாம்.

ஆராதனமே அஹோராத்ரகைங்கர்யங்களில் முக்யமாகும். ஸ்வார்ச்சைக்குத் திருவாராதனம் (ஸ்ரீ மூர்த்தி பூஜை) பிரதிதினமும் அவசியமாகும். காலத்தில் செய்யமுடியாமற் போனால் போஜனத்துக்கு முன் எப்போதாவது செய்க இந்த பூஜை பிதாபுத்ராதிகளும் தனித்தனியே செய்ய வேண்டு

வதாம். அசக்தியில் ஒரே கிருஹத்தில் இருப்பவர் ஒருவர் செய்யும் பூஜையில் துளஸி-புஷ்பம்-சந்தனம் முதலியன ஸம்பாதிப்பதில் ஸஹாயம் செய்து திருமஞ்ஜன தீர்த்தம் பெற்றால் போதும். அப்போதும் ஹ்ருத்யாகம் மட்டும் தனியே செய்க. இல்லையேல் மற்ற கர்மங்கள் செய்ய அதிகாரமும் இழந்ததாம். இவன் செய்ய விருக்கும் பகவதாலய கைங்கர்யங்கள், அதிதிஆராதனம், தானம், ஸ்ரீமத்ராமாயண - கீதாதி பாராயனம், ப்ரவசனம் முதலாக எல்லாம் பழுதேயாம். ஒரு நாள் வேறிடம் போக நேரிட்டாலுங்கூட ஸ்வார்ச்சாமூர்த்தியுடன் போக வேண்டும்.

பெருமாள்ஸந்நிதிமேடையை கோமய(பசுஞ் சாண)த்தால் சுக்தப்படுத்துவது. மெழுகி கோல மிடுதல் முதல் எல்லாம் சக்தியுள்ளவன் தானே செய்வதாம். ஆரம்பத்தில் மூலமந்த்ரத்தால் மும்முறை ப்ராணாயாமம் செய்யவேண்டும். ஒவ்வொரு ப்ராணாயாமத்திலும் 28 தரம் மூல மந்த்ரம் சொல்ல வேண்டும். அசக்தியாகில் பன்னிருதரம். மூன்று தரமுமாம். ஒரே ஒரு முக்கிய ப்ராணாயாமம் செய்வதுமாம். பிறகு "க்ருதஞ்ச..." இத்யாதி ஸங்கல்பம். தேசகாலங்கள் அனுகூலமாய் இராத போது சுருக்கமாக ஸங்கல்பித்து, 'பகவானேவ...ப்ரதிபாதயதி' என்று அநுஸந்தித்து ஹ்ருத்யாகம் தொடங்குவது. இரண்டே வட்டில்களைக் கொண்டு செய்யும்

போது ஒரு வட்டிலில் தீர்த்தம் சேர்த்து கந்த புஷ்பங்களை வைத்து மூல மந்த்ரத்தால் ஜபித்து 'ஓம் நமோ பகவதே திவ்யம் தோயம் பரிகல்ப்ப யாமி' என்று பொதுவாக பரிகல்பித்து உத் தரணியால் தீர்த்தம் எடுத்து, 'பகவன்! இதமர்க் யம் அவலோகய',...பாத்யமவலோகய' என்ற வாறு தனித்தனியே ஸமர்ப்பணம் செய்து முடிப் பது. அந்தந்த சேஷத்தை மற்றொரு வட்டிலில் சேர்ப்பது.

ஸுரபிமுத்ரையாவது—வலக்கை நடுவிரலை இடக்கை நடுவிரல் ஆள்காட்டிகளுக்கு இடையில் வைத்து மடக்கி இடக்கை மோதிர விரலை வலக் கை சுண்டுவிரல் மோதிர விரல்களின் இடையில் வைத்து மடக்கி, இரண்டு கட்டைவிரல்களைச் சேர்ப்பது, இரண்டு ஆள்காட்டிகளைச் சேர்ப்பது, வலக்கை மோதிரவிரல் இடக்கை நடுவிரல்களைச் சேர்ப்பது, சுண்டு விரல்களைச் சேர்ப்பது. (இது காமதேனுவின் நான்கு முலைக் காம்புகள்.)

க்ராஸமுத்ரையாவது—வலக்கை நடுவிரல் மோதிரவிரல்களின் மூன்றும் கணுவில் கட்டை விரலைச் சேர்ப்பது. ஐந்துவிரல்களின் முனை களைச் சேர்ப்பது என்பதும் ஒரு பக்ஷம்.

### உபசாரப்ரக்ரியை

எல்லா உபசாரங்களையும் 'பகவன்! அர்க்ய மவலோகய', 'ப்ரதிக்ருஹ்ணீஷ்வ' என்றாற் போலே அந்தந்த பெயரைச் சொல்லி ப்ரதர்சன

ப்ரார்த்தனைகளைச் செய்து மூல மந்த்ரம் சொல்லி ஸமர்ப்பிப்பதாம்.

அல்லது முதலில் மந்த்ரம் சொல்லி க்ரமமாக ப்ரதர்சனம், ப்ரார்த்தனம், ஸமர்ப்பணம் செய்ய வாம். அல்லது முதலில் மந்க்ரம் உச்சரித்து ப்ரதர்சனம் செய்து மீண்டும் மந்த்ரம் உச்சரித்து உபசரிக்கவாம். இங்கே முதல் பக்ஷம் யுக்தமாகும்.

பிறகு 'க்ஷமஸ்வ', 'ப்ரீயதாம்' என்று க்ஷமையும் ப்ரீணனமும் செய்க. அசக்தன் க்ஷாமண-ப்ரீண ணங்களை அந்தந்த ஆஸனமுடிவில் ஒரே தரம் செய்தாலும் போதும்.

### கண்டை (மணி)

திருக்காப்புநீக்கல், அந்தந்த ஆஸனமிடல், அர்க்யம், தூபம், தீபம், திருமஞ்ஜனம், நிவே தனம், ஆரத்தி, திருக்காப்பு சேர்ப்பது முதலான ஸமயங்களில் பரதிஷ்டை செய்த கண்டையை ஸேவிக்க வேண்டும். கதவுதிறத்தல், அர்க்யம், தூபம், தீபம், திருமஞ்ஜனம்-முதலாம் காலங்களில் கண்டையை ஒரு பக்கம் மட்டும் ஸேவிப்பதாம். மற்ற ஸமயங்களில் இருபக்கம். ஆரம்பத்திலும் முடிவிலும் வலது கையால் கண்டையை ஸேவிக்க வேண்டும். கண்டையை ஸேவித்தபின் திறப்ப தும் சாத்துவதுமாம். ஆஸநம் ஸமர்ப்பிப்பதிலும் அவ்வாறே. வலதுகைக்கு, வேறு கார்யம் உள்ள போது இடது கையால் மணியை ஸேவிப்பது. அப் போதும் வலது கையால் எடுத்து இடது கையில்

வாங்கி ஸேவிக்க; பிறகு வலது கையால் வாங்கி மேடையில் வைக்க வேண்டும். ஒரு போதும் இடது கையால் எடுப்பதும் வைப்பதும் தகா.

திருமஞ்ஜனத்திற்குப் பின் உலர்ந்த வஸ்த்ரத்தை மூன்று மடிப்பாக்கி இடது கையில் வைத்து வலது கையால் (ஸாளக்ராமசிலையை) ஸ்ரீமூர்த்தியை அங்கே எழுந்தருளப் பண்ணி துணியால் ஒத்தவும். ஜலம் போவதற்காக ஸ்ரீமூர்த்தியை அசைப்பது கவிழ்ப்பது துவாரத்தில் வஸ்த்ரத்தைத் திணிப்பது தகா.

க்ருஹஸ்தன் திருவிளக்கின்றி திருவாராதனம் செய்வது தகாது. பசுநெய் திருவிளக்குக்கு உத்தமம். எண்ணெய் மத்யமம். தேங்காய் முதலான தைலமும் எருமை-ஆடு முதலானவையின் நெய்யும் தகா. தீபதைலத்தையும் திரியையும் கையால் தொடலாகாது. கோயில் கதவு திறப்பதும் சாத்துவதும் நிசப்தமாக செய்திட வேண்டும். பகவத்-பாகவத ப்ரணாமம் செய்த பின் கையை அலம்ப வேண்டா.

ஷோடச உபசாரங்களாவன—

எம்பெருமானுக்கு கீழ்க்காணும் பதினாறு உபசாரங்கள் முக்யமாம். 1 ஆஸனம் 2 அர்க்யம் 3 பாத்யம் 4 ஆசமனம் 5 வஸ்த்ரம் 6 பூஷணம் 7 யக்ஞோபவீதம் 8 கந்தம் 9 புஷ்பம் 10 தூபம் 11 தீபம் 12 நைவேத்யம் 13 திருக்கைக்கு தீர்த்தம் 14 தாம்பூலம் 15 ப்ரதக்ஷிணம் 16 ப்ரண

மம். இவற்றுள் இல்லாத வஸ்துவுக்கு பதில் ஸர்வார்த்ததோயம் ஸமர்ப்பிக்க வேண்டும். வேறு படியிலும் ஷோடசோபசாரமுறை தொகுக்கப் பெற்றுள்ளது.

[1]விஷ்வக்ஸேனுராதனம் செய்து, ப்ரணுமம் செய்து, நேர்ந்த அபராதங்களுக்காக காலேயில் அபிகமனகாலத்தில் சொல்லப்பட்ட ப்ரபத்தி யோகத்தை மனத்திற்கொண்டு ஊஹித்து ப்ரணுகதி செய்யவும். முடிவில் அர்க்யம் ஸமர்ப்பிக்கவும். ஸாளக்ராமசிலேயிலும், சுபாச்ரயமான திருமேனியை த்யானம் செய்தே பூஜை செய்ய வேண்டியிருப்பதால் எல்லா உபசாரங்களும் உண்டு. பிம்பங்களுக்கான புளிக்காப்பு முதலானவை இங்கே இல்லே.

இங்கே நித்யக்ரந்தாதிகளில் சில உபசாரங்கள் ஒவ்வொன்றில் ஒவ்வொரு விதமாயிருப்பதால் லக்ஷ்மீஹ்நிகத்தில், லோகரீதியையும் அநுஸரித்து ஒரு ரீதி கொள்ளப்பட்டது. உதாரணம் முதலில் திருமண்காப்பு பிறகு பூ (கந்தம்) சந்தன ஸமர்ப்பணம் என்று லக்ஷ்மீஹ்நிகத்தில்.

ஒரு நாளில் ச்ரவணம், ஸங்க்ரமணம், துவாதசி, க்ரஹணம், ஸ்வாசார்யதிருநக்ஷத்ரம், ஜன்ம நக்ஷத்ரம் முதலான அனேக நிமித்தங்கள்

---

1 பூர்வாசார்யர்களின் ஆஹ்நிகக்ரந்தங்களிலிருந்து தெரிய வரும் முறை விரிவு வேண்டுமாகில் வடமொழியில் காண்க.

வந்தால் சக்தியுள்ள அதிகாரி க்ரமமாக தனித் தனியே நைமித்திகாராதனம் செய்வதாம். அசக்தன் ப்ரதானமாக ஒன்றைச் செய்து மற்ற வற்றை அந்தந்த காலங்களில் ஹ்ருத்யாகங் களாக செய்யவும். அசக்தன் ஒன்றை ஸங்கல் பித்துக் கொண்டு புனர்மந்த்ராஸனம் வரையில் செய்து, ஒவ்வொரு ஆராதனத்துக்கும் தனித் தனியே ஸங்கல்பித்துக் கொண்டு ஆராதனந் தோறும் அர்க்ய—பாத்ய—ஆசமனீய—கந்த—புஷ்ப—தூப--தீப--நைவேத்ய--பானீய—ஆசமனங்களான பத்து உபசாரங்களை ஸமர்ப்பிப்பதாம். பிறகே பர்யங்காஸனம் ஸமர்ப்பித்து முதலில் ஸங்கல் பித்த திருவாராதனத்தை முடிப்பதாம். நைமித் திக கர்மாராதனத்தாலேயே நித்யாராதனமும் செய்த படியாம். வேறில்லை. அப்போது அந்தந்த நைமித்திக ஸங்கல்பம் மட்டும் யுக்தம்.

'குருஜன்ம நக்ஷத்ரப்ரயுக்தவைசேஷிக பகவதாராதநேந பகவத்கர்மணா', 'ச்ரவண நக்ஷத்ரப்ரயுக்தவைசேஷிகபகவதாராதநேந பக வத்கர்மணா' பகவந்தம் வாஸுதேவம் அர்ச்ச யிஷ்யாமி' என்று ஸங்கல்ப்பம் என்பர் சிலர். மற்றும் சிலர், 'இதம் வைசேஷிகாராதனம் கரிஷ் யே' என முதலில் ஸங்கல்பித்துக்கொண்டு பிறகு பகவச்சாஸ்த்ரப்படி ஸங்கல்பம் செய்வதென்பர்.

க்ரஹண துஷ்ட காலங்களில் வேறு நிமித்த மான ஆராதனம் செய்ய வேண்டா.

ஒரு நாளில் ஒருதரம் தான் பூதசுத்தி செய்து கொள்ள வேண்டுவது. நடுவே போஜனம் பண்ணநேர்ந்தாலும் மல விஸர்ஜனம் ஏற்பட்டாலும் மீண்டும் செய்ய வேண்டும்.

பகவதபிஷேக தீர்த்தத்தை வேறொரு பாத்திரத்தில் சேர்த்து உட்கொள்வது. பகவானுக்கு ஸமர்ப்பிப்பதற்கான உத்தரணியாலே தீர்த்தம் பருகலாகாது. வேறு பாத்திரம் இல்லையாகில் வலது கையாலேயே பெருமாள் தீர்த்தம் எடுத்து உத்தரணியை இடது கையில் வாங்கி வலது கையில் தீர்த்தம் சேர்த்துக் கொண்டு உத்தரணியை இடது கையினின்று மேடையில் வைத்த பின் உட்கொள்வதாம். பெருமாள் தீர்த்தம் உட்கொண்டதற்காகக் கையை அலம்ப வேண்டா.

## போஜனப்ரகரணம்

வைச்வதேவம் முடித்துக் கொண்டதுமே போஜனம் செய்யாமல் பால் கறக்கும் நேரம் (கோதோஹனம்) அளவு அதிதி வரவை எதிர் பார்த்து அவர்களுடன் போஜனம் செய்வது சக்தனாகில் தானே ப்ரணவத்தைக் கொண்டு பசுஞ்சாணத்தால் சதுரச்ரமாக (நான்கு மூலைகள் அமையும்படி) கோணல் இல்லாமல் போஜன ஸ்த்தலசுத்தி செய்து கொள்ளவேண்டும். எந்த இடம் சுத்தி செய்வதானாலும் நடுவில் கையை மேலே தூக்காமல் சாணமோ தீர்த்தமோ தேவைப் பட்டால் தரையில் வைத்திருக்கும் வலது கை

மேல் இடது கையில் பாத்திரத்திலுள்ள சாணம் கலந்த தீர்த்தம் சேர்த்து ஸ்தல சுத்தி தொடர்ந்து செய்வதாம். கையை தூக்கினால் அலம்ப வேண் டும். பேயத்தி-பலா-மா-தென்னை-வாழை-பில்வம் மரமுருக்கம், தாமரை முதலான இலைகளில் போஜனம் பண்ணலாம். ஆல-அரச-எருக்க இலை போன்றவற்றில் போஜனம் கூடா. தலைமுடி அவிழ்ந்திருக்கவும், கால் நீட்டிக் கொண்டும், உடல் மூடிக் கொண்டும், உத்தரீயத்தை இடுப்பில் சுற்றிக் கொண்டும், தலைமேலோ தோளிலோ பக்கத்திலோ வைத்துக் கொண்டும், ஆஸனமாய் அமைத்துக் கொண்டும் போஜனம் கூடாது. பூணூல்போல் யஜ்ஞோபவீதமாக உத்தரீயத் தை தரித்து போஜனம் செய்வது. புருஷர் தீர்த்த பாத்திரத்தை வலது பக்கமும், ஸ்த்ரீகள் இடது பக்கத்திலும் வைத்துக் கொள்ளவேண்டும். தீர்த் தம் பருகும்போது பாத்ரம் முகத்திற்குமேல் ஆறு அங்குலம் உயரத்தில் இருக்கவேண்டும். இரும்பு ஸம்பந்தமானதும், வேறொருவருடையதும், திரு வாராதனாதிகளுக்கு உபயோகப்படுவதும், சக்ரம் முதலானவை போடப் பெற்றதுமான பாத்திரத் தால் தீர்த்தம் பருகலாகாது. வலது பக்கம் உள்ள தீர்த்த பாத்திரத்தை தோட்பட்டையுள்வழியாக எடுக்க வேண்டாம். சாப்பிடும்போது தவிர, கையை போஜன பாத்ரத்தை விட்டு மேலேயோ, வலது துடைமேல் ஊன்றியோ வைத்திருக்கலா

காது. இடது கையானது தீர்த்தம் பருக சுத்த மாக இருக்கவேண்டும். பூமியில் அல்லது தொடை மீது ஊன்றி வைத்திருக்கவும். உடலின் மற்ற பாகங்களை தொடவும் வேண்டா. ஆரம்பத்தில் ப்ராணாஹுதி செய்யும்வரை மௌனமாக இருக்கவேண்டும். அதிதிகள் உபசரிக்க வார்த்தை சொல்லலாம். அவர்களில்லாதபோது மௌன மாக இருப்பது நலம். வீண் பேச்சு கூடாது. ப்ராணாஹுதி பல்லில் படாமல் செய்யவேண்டும். கையில் சாப்பிட எடுக்கப்பட்டதை முழுக்க சாப் பிடவும். ஊர்காய் முதலியன புக்தசிஷ்டம் (பாதி சாப்பிட்டது) இலையில் வைக்கக் கூடா. ஒரு தரம் தீர்த்தம் பருகிய பின், பாத்திரத்தில் மிச்சம் இருக்கக் கூடாது. மிச்சமிருந்தால் கீழே ஒரு பொட்டு சேர்த்துவிட்டுப் பருகுக. போஜன காலம் போக மற்ற ஸமயங்களில் இடது கையால் தீர்த்தபானம் தகாது. இரு கைகளாலும் ஏந்தி யும், நின்றும் குடித்தல் கூடாது. போஜனத்திற்கு ஆசமனம் பண்ணதும் யாராவது ஸேவித்தால் மீண்டும் ஆசமனமாம். குக்குடாஸனமாய் இருந் தோ ஒரு பாதத்தால் பூமியைத் தொட்டுக் கொண் டோ சாப்பிடுவது. பாத்திரத்தில் பரிமாறியிருக் கும் அன்னத்தை ப்ராணாஹுதிக்குமுன் தொட வேண்டா. முதலிலும் முடிவிலும் பாத்ய தீர்த்தத் தைக் கொண்டே ஆபோசனமாம். பரிஷேசனம் பண்ணிய பின் கையில் மிச்சமாயுள்ள தீர்த்தத்

தால் அது தகாது. ப்ராணாஹுதிக்குப் பின் இடது பக்கத்திலேயே ஹஸ்தோதகசுத்தி. சாப்பிடும்போது ஓசை கூடா. ஓசை வந்தே தீரும்படியான பக்ஷ்யங்கள் சாப்பிடும்போது அது தோஷமில்லை. கொட்டாவி விடுகை, காரி துப்புகை முதலியன போஜனகாலத்தில் வேண்டாம். சாப்பிடும் பண்டங்களின் குண தோஷ சர்ச்சையும், செய்யவேண்டா. ப்ராணாஹுதிக்கு முன் நெய் சேர்த்திருந்தால் பிறகு எச்சிலில் கூட சேர்த்துக் கொள்ளலாம். ப்ராணாஹுதிகால அன்னம் கடைசிவரை மிச்சமாம்படி வைத்திருக்கவும். மேற் கொண்டு அன்னம் பரிமாறினால் அந்த அன்னத்தையும் சேர்த்துக் கொண்டு புஜிப்பது. பக்வம் செய்யாததையும் தைலத்தில் பக்வமானதையும் (கரண்டியால் பரிமாற வேண்டாம். மற்ற பண்டங்களைக் கையால் பரிமாற வேண்டா. இரும்புக்கருவியால் எதுவும் பரிமாற வேண்டா. தளிகை ஸமர்ப்பித்த பின் போஜன காலத்தில் தேவைபட்டாலும் லவணாதிகள் (உப்பு முதலியன) சேர்த்துக் கொள்ள வேண்டா. பாகவதர்களுக்கானால் தோஷமில்லை. பாகவதர்களுக்குத் தெரியாதபடி செய்வது. போஜனகாலத்தில் உப்பைப் பார்க்கக் கூடா. உப்பென்று சொல்வதுமில்லை. போஜனகாலத்தில் தீபம் அணைந்துவிட்டால் தீபம் வரும்வரை வலக்கையானது இலையை விட்டு விலகாமல் இருக்க வேண்டும். பிறகும் ஏற்

களவே பரிமாறியுள்ளதை மட்டும் புஜிக்கலாம். அடுத்தவர் வாயில் தீர்த்தம் சேர்க்க நீர் அருந்த லாகாது. ஒருவரைத் தொட்டுக்கொண்டும சாப் பிடக் கூடாது. கையை கழுவாமல் நாக்கால் கையை நக்காமல் ஆபோசனம் பெற வேண்டும்.

## ஹஸ்தசோதனப்ரகரணம்

கைகளை அலம்பும் போது முதலில் தொடை களைச் சுத்தம் செய்து பாத்ரத்தை அங்கு வைத்துக் குனிந்தவண்ணம் ஜாக்ரதையாக கையினின்று ஜலம் பாத்திரத்தில் தெறிக்காதபடி சோதனம் செய்க. கையோடு கையை சேர்த்து நன்றாய் தேய்த்து அலம்பிய பின், இடது கையைத் தனி யே வலது கையால் சாய்த்த பாத்ர ஜலத்தால் சோதித்து அந்தக் கையில் சொம்பை வாங்கி வலக்கையை சோதித்துக் கொள்க. கைகளைச் சேர்த்து அலம்பி சொம்பை இடக்கையில் வாங்க வேண்டா. கை அலம்பும் முன் நாய் சூத்ரர் காணப்பட்டால் முதலில் கைகளை அலம்பிக் கொண்டே வாய் கொப்பளிப்பதாம். பிறகும் கை களை அலம்பவும். இடக்கையால் நகங்களைச் சுத்தம் செய்து கொண்டு கைகளை அலம்பவும். கண்டூஷகாலத்தில் தீர்த்தம் உட்கொள்ள வேண்டா. முடிவில் இடதால் வலதையும் வலதால் இடதையும் முழங்கை வரை சோதித்திடுக. பிறகு கால்களை மூன்று இடங்களில் தனித்தனியே முழங்கால் வரை சோதித்துக் கொண்டு வேறு

தீர்த்தத்தால் இரண்டு ஆசமனம் ஆன பின்னே மற்றவை செய்ய வேண்டும. இதற்குப் பிறகு உள் பாத்திரத்தால் கைகளை சோதித்துக் கொண்டு அபிஷேகதோயம் சிறிதளவு பருகுவதாம்.

ஸ்வாத்யாயப்ரகரணம்

தீர்த்தம் (அபிஷேகதோயம்) பருகிய பின் சுத்தமான ஸ்த்தலத்தில் அமர்ந்து இஜ்ஜையை முடித்துக் கொண்டு 'க்ருதம் ச' என்று தொடங்கி ஸ்வாத்யாயத்திற்கு ஸங்கல்பித்து யதாசக்தி வேதாந்த க்ரந்தம், ஸாத்துவிக புராணம் படிப்பது, ப்ரவசனம் பண்ணுவது, மந்த்ரஜபம் முதலியன செய்யவும். அர்த்த காமங்களில் நசையற்றவர்களும், பிற நிந்தை முதலான தோஷம் சிறிதுமற்றவர்களும், ஆத்மகுண பூர்ணர்களும், அநுஷ்டானம் வரை நடத்திச் செல்லும்படியான ஞானம் நிறைந்தவர்களும், பரமைகாந்திகளுமான பெரியோர்களுடன் அடக்கத்துடனும் பெருமிதத்துடனும் உரையாடல் வைத்துக்கொள்ள வேண்டும். இவ்வாறில்லாத கேவல ஸ்ரீவைஷ்ணவன் விஷயத்திலும் ப்ரீதியுடன் இருக்க வேண்டும். எவரிடத்திலும் ஒரு போதும் கரணத்ரயத்தால் (மனம்–வாக்–காயம்) அபராதலேசமும் செய்யலாகாது. ஏற்பட்டால் க்ஷமை கொள்ள வேண்டும். 'பொருத்தருள்க' என ப்ரார்த்தனை செய்ய வேண்டுமென்பதாம். அப்படி செய்யாத போது ஸ்ரீவைஷ்ணவாபராதியான இவனுல்

செய்யப்படும் எல்லா நற்கார்யங்களும் வீணும். பரதேவதா ஞானம், அற்ப தேவதையை நாடாமல் இருப்பு புறந்தொழா மாந்தர் என்னும்படி என்ற இரண்டு அம்சங்கள் உள்ள கேவல ஸ்ரீவைஷ்ணவர் விஷயத்தில் செய்யும் அபராதமும் நற்கார்யமனைத்தையும் வீணாக்கும். அவைஷ்ணவர் விஷயத்திலும் அபராதம் ஏற்பட்டால் நல் வார்த்தை மூலம் அவ்வவ்வதிகாரிக்கிடாக அபராத பரிஹாரம் செய்து கொள்ள வேண்டும். ஒரு பாகவதன், ப்ரமாணங்களுக்கும் சிஷ்டாசாரங்களுக்கும் விரோதமாக வாதமோ கட்டுரையோ செய்ய நேர்ந்தால், பாகவததூஷணம் சிறிதுமில்லாமல் நேரிடையாகவோ க்ரந்தமாகவோ சர்ச்சை செய்வது அபராதத்தில் சேராது. அதையும் அபராதமாக அப் பாகவதர் நினைத்தாலும், ஒருவன், தான் நிரபராதியாயிருக்க குற்றம் செய்ததாகக் கருதினாலும் அப்போதும், அனுகிக்ஷமை கொள்வதே. பின்னும் அவ்வாறே இருந்தால் பொறுத்து நிர்விகாரமாயிருப்பது. ஸன்னியாஸி, க்ருஹஸ்தன் என்ற வாசியற யாவருக்கும் இது பொது க்ஷாமணம். ஸன்னியாஸி செய்வது அதிகாரானுகுணமாக நமஸ்காரமின்றியாம்.

ஸாயம் ஸந்த்யோபாஸநம்

சக்தன், இதை நதி—குளம்—முதலாமிடங்களில் செய்ய வேண்டும். பிறகு ஸ்வார்ச்சையை ஆராதித்து, காலையில் போல் சரணாகதி செய்ய

வாம். அங்கே 'ஸாயம்' என்பதற்கு பதில் 'ச்வ: ப்ராத:' என்பதாம். தளிகை ஸமர்ப்பிப்பதற்கு முன் வைச்வதேவ தர்ப்பணம் செய்வது தகாது. ஸூர்யாஸ்தமனமாகி இரண்டு நாழிகைக்கு மேல் போஜனம்.

### யோகப்ரகரணம்

ஸ்வாத்யாயத்தை முடித்து யோகத்திற்காக ஸங்கல்பித்து சக்தன் ஸ்ரீவைகுண்டகத்யாநுஸந்தானம் பண்ணுவது. அசக்தன் பகவத்த்யான ஸோபானம் அநுஸந்திப்பது. பாதாம்போஜம் என்கிற ச்லோகம் மட்டுமாவது. 'ரங்கநாதஸ்ய' என்பதற்கு பதிலாக 'ஸ்ரீநிவாஸஸ்ய' 'தேவராஜஸ்ய, தேவநாதஸ்ய, பூவராஹஸ்ய' என்றவாறு இஷ்டமான மூர்த்தியை அநுஸந்திப்பது. வடக்கு தவிர மற்ற திக்கில் தலைவைத்து பரிசுத்தமான சயனத்தில், 'மாதவ' சப்தம் சொல்லி வஸ்த்ரத்துடன் சுகமாக சயனிப்பது.

### ஸர்வப்ரகரணசேஷம்

சில வைதிக கர்மங்களில் மூன்று ஆசமனம், சில இடங்களில் இரண்டே ஆசமனம். காயத்ரீ ஜபம் ஆயிரத்தெட்டென்றும் நூற்றெட்டென்றும், குறைவாகவும் சொல்லப்பட்டுள்ளது. அசுத்தமான பாத்ரத்திற்கு பதின்மூன்று தரம் சோதனம் சொல்லப்படும். இப்படியே சௌச ப்ரக்ஷாளனங்களிலும் எண்ணிக்கை. எதிலும் வேகமாக அரைகுறையாக அதிகம் எண் பெறு

வதை விட நிதானத்துடன் குறைந்த எண்ணில் செய்வதே சிறந்தது.

பாத்ரவ்யவஸ்த்தை

பாத்ரங்கள் தேவபாத்ரம், மனுஷ்யபாத்ரம் உள்பாத்ரம் என மூன்று வகை. உத்தரணீ, வட்டில் முதலியன திருவாராதனத்திற்கே உரியவை தேவபாத்ரங்கள். கை கால் சோதிக்கைக்கும் பானத்திற்கும் உபயோகப்படுமது மனுஷ்யபாத்ரமாம். பாகத்திற்கு உபயோகப்படுமவை உள்பாத்ரங்கள். இம் மூவகையான பாத்ரங்களும் ஒன்ருேடொன்று படாதபடி ஆளப்பட வேண்டும். உள்பாத்ரத்தோடு தேவ பாத்ரத்திற்கு ஸம்பந்தம் ஏற்பட்டாலும் மனுஷ்ய பாத்ர ஸம்பந்தம் ஒருபோதும் கூடாது. அவரவர் பாத்ரம ஒன்ருேடொன்று படாமலிருக்க வேண்டும். அப்படி ஸம்பந்தம் ஏற்பட்டால் கேசவாதி நாமங்கள் சொல்லி மண்—புளி—ஜலம் இவற்ருல் சுத்தி. ஒருதரம் சுத்தி செய்த பின் பாத்ரங்களை ஜலத்தால் நன்ருய் அலம்பி இடது கையை சோதித்து, பாத்ரங்களை இடது கையில் வாங்கிக் கொண்டு வலது கையை மீண்டும் அலம்பி, மீண்டும் மண்ணைக் கொண்டு பாத்ரம் சுத்தி செய்வதாம். ஒவ்வொரு தரமும் இப்படியே சுத்தி செய்ய வேண்டும். பாத்ரம் தொட்ட கையை அலம்பாமல் மண் முதலானவற்றை எடுக்கலாகாது. மனுஷ்ய பாத்ரத்தைத்

தொட்ட கையால் தேவ பாத்ரத்தைத் தொட்டாலும் முன் சொன்னபடி 13தரம் சுத்தி செய்ய வேண்டும். இப்படியே, புதிய பாத்ரத்தோடும், கால் அலம்பும் பாத்ரத்தோடும், மற்றவர் பாத்ரத்தோடும், சுத்த பாத்ரங்களுக்கு ஸம்பந்தம் ஏற்பட்டாலும், தொட்ட கையால் தொட நேர்ந்தாலும் முன் சொன்ன சுத்தி செய்தேயாக வேண்டும். புருஷனோ ஸ்த்ரீயோ அங்கங்களை, உடுத்திய துணியை, தலையை, தலைமயிரைத் தொட நேர்ந்தாலும் கை சுத்தி செய்து கொண்டு உட்பாத்ரங்களைத் தொடவேண்டும். 'ஸ்த்ரீகளுக்கு, தாங்கள் தரித்த வஸ்த்ரங்களைத் தொட்டதற்காக கையலம்ப வேண்டா. அசுத்தி இடையாது' என்பதற்கு ப்ரமாணமோ பெரியோர் அநுஷ்டானமோ இல்லை.

கைகளை நன்கு சுத்தி செய்து கொண்டே அந்த மூலைகை பாத்ரங்களையோ வேறு பரிசுத்தமான பொருளையோ எடுக்க வேண்டும். மேல் கையை மட்டும், ப்ரஹ்ம யஜ்ஞாதிகளில் அலம்புவது கூடா. அப்போது எல்லா பாத்ரங்களும் அசுத்தமாய், அவற்றைக் கொண்டு செய்யப்பட்டது எல்லாம் பழுதேயாம்.

எவனொருவன் வேதம்-ஸ்ம்ருதி-பஞ்சராத்ரங்களில் கூறப்பட்ட நித்ய-நைமித்திக கர்மங்களை (சாஸ்த்ரப்படி) அதிகாரிக்கும் ஸௌக்ஷ்மாசாரங்கள் அறியப்படாத போது அவனது உடல்-பூணூல்-உத்தரீயம் முதலாக அனைத்தும் அசுத்தமாம். துளஸீ-புஷ்ப-சந்தனாதிகள் எம்பெருமானுக்கு ஸமர்ப்பிக்கக் கூடாதபடியாம்.

ஸௌக்ஷ்மாசாரங்களைப் பற்ற நல்லறிவின் பெருமையாலேயே மற்ற குலத்தைவிட ஸ்ரீவைஷ்ணவ குலத்தை மற்றவர்கள் கொண்டாடுகிறார்கள். ஆதலால் காலாதி தோஷத்தால் ஆசாரக் குறைவு வேண்டா என்று இங்குச் சிறிது வழி காட்டப் பெற்றது.

(ஸ்ரீமதே ரங்கராமாநுஜ மஹாதேசிகாய நம:)

சுபமஸ்து

## शोधनिका

95. 18. पूर्वमञ्जलिना

96. 20. कुर्यात्। श्राद्धादिदिनेषु तैरपि न कुर्यात्। तदा

105. 19. प्रदर्शनप्रार्थनप्रदानानि

20. प्रदर्शनप्रार्थने

109. 20. तदुक्तम् पाद्मे